கடவுள் துணை

மதுரைக் கண்ணங்கூத்தனார்

அருளிச்செய்த

# கார் நாற்பது

## மூலமும்,

சென்னைப் பச்சையப்பன் காலேஜ்

தமிழ்ப் பண்டிதர்

**கா. ர. கோவிந்தராஜ முதலியாரால்**

எழுதப்பட்ட

## உரையும்.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்பு செட்டி வீதி, சென்னை.

1924

விலை அணா 3

ஸ்ரீ

# முகவுரை



கார் நாற்பது என்பது சங்கத்துத் தொகை நூற்களாகிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு என்பனவற்றுள் மூன்றாவதாகிய பதினெண் கீழ்க்கணக்கிற் சேர்ந்தது. இப் பதினெண் கீழ்க்கணக்கிற் சேர்ந்த நூற்கள் பதினெட்டில் பதினேழு நூற்கள் இன்னவை என நன்கு துணியப்பட்டு வந்தன. ஒன்று மாத்திரம் அங்ஙனம் இன்னதெனத் துணிந்துரைக்கக் கூடாததாயிருந்தது. அப் பதினெட்டு நூற்களையுங் குறிக்கும் வெண்பா வருமாறு:

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூல
மின்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு."

அந்நூல் இன்னதெனக் கொள்ளவேண்டி இவ் வெண்பாவினுக்குப் பலரும் பல்வாறு பொருள் கூறிவந்தனர். சிலர், இவ் வெண்பாவின் ஈற்றடியிலுள்ள கைந்நிலை என்னுஞ் சொல்லை நோக்கிக் 'கைந்நிலை' என்னு நூலே அஃதெனக் கூறி அத் தொகையைச் சரிப்படுத்தினர். யான் அவர் கருத்தைப் பின்பற்றிக் களவழி நாற்பதின் முகவுரையில் அங்ஙனமே பதினெட்டு நூற்களைக் குறித்தேன்.

ம-ள-ள-ஸ்ரீ V. O. சிதம்பரம் பிள்ளை அவர்களுக்குக் கிடைத்த திருமேனி இரத்தினக் கவிராயரவர்களது 'இன்னிலை' என்னு நூலின் ஏட்டுப் பிரதியினால் அக் கருத்தும், இவ் விஷயத்தில் மற்றையோர் கொண்டிருந்த கருத்துகளும் தவறானவை என்பது நன்கு விளங்கியது. அவ் வேட்டுப் பிரதியில் அவ் வெண்பாவின் பாடம் அடியில் வருமாறு காணப்படுகின்றது.

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூல
மின்னிலை காஞ்சியுட னேலாதி யென்பவே
நன்னிலைய வாங்கீழ்க் கணக்கு."

முற்காட்டிய பாடத்தினும் 'இன்னிலை' என்னுஞ் சொல் இருப்பினும் அஃது ஒரு நூலென்பது முன் தெரியாமல் இருந்தமையின் அதனை அடைமொழி எனக் கொண்டு பொருள் கூறிவந்தனர்.

ம-ா-ா-ஸ்ரீ திரு செல்வகேசவராய முதலியார் அவர்கள், M. A. தாம் உரையோடு சென்ற வருஷம் பதிப்பித்த ஆசாரக்கோவையின் முகப்பில் அப் பதினெட்டு நூற்களுக்கும் அவ்வெண்பாவில் வைத்த முறைப்படி எண் கொடுத்து அவற்றைப்பற்றித் தனித்தனி விளக்கிக் கூறியுள்ள இடத்தில், 'இன்னிலை' என்னு நூலை அம் முறைப்படியே 16-வது எண்ணில் வைத்து அதைப்பற்றி அடியில் வருமாறு கூறியிருக்கின்றனர்.

"16. இன்னிலை - பொய்கையார் பாடியது. மதுரையாசிரியர் பூதனார் தொகுத்தது. கடவுள் வாழ்த்து, பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றியது. அறப்பால் பத்தும், பொருட்பால் ஒன்பதும், இன்பப்பால் பன்னிரண்டும், வீட்டிலக்கப்பால் பதினன்கும் ஆகிய நாற்பத்தைந்து வெண்பாக்களை யுடையது." ஆனல், அவர்கள் அவ் வெண்பாவின் பாடத்தை முதற் காட்டிய விதமாகவே கொண்டு அவ் விளக்கத்தின் தலைப்பிற் குறித்திருக்கின்றார்கள்.

இதுகாறும் இன்னதென விளங்காமலிருந்த அந்நூல் இவ்வாற்றால் இன்னதென நன்கு விளங்கியது. ஆதலின், அப் பதினெட்டு நூற்களையு மாணவர்கள் சரியானபடி யுணரும்பொருட்டு மீண்டும் அவற்றை ஈண்டுக் குறிக்கின்றேன்

1. நாலடியார்.
2. நான்மணிக்கடிகை.
3. இனியவை நாற்பது.
4. இன்னா நாற்பது.
5. கார் நாற்பது.
6. களவழி நாற்பது.
7. ஐந்திணை ஐம்பது.
8. ஐந்திணை எழுபது.
9. திணைமொழி ஐம்பது.
10. திணைமாலை நூற்றைம்பது.
11. திருக்குறள்.
12. திரிகடுகம்.
13. ஆசாரக்கோவை.
14. பழமொழி.
15. சிறுபஞ்சமூலம்.
16. இன்னிலை.
17. முதுமொழிக்காஞ்சி.
18. ஏலாதி.

அவ் வின்னிலை என்னு நூலின் இரண்டு செய்யுட் களை ஈண்டுக் குறிக்கின்றேன்.

"வேலற் றரீஇ விரிசடைப் பெம்மான்
வாலிழை பாகத் தமரிய கொழுவேற்
கூற்றங் கதழ்ந்தெறி கொன்றையன்
கூட்டா வுலகங் கெழீஇய மலிந்தே."

கடவுள் வாழ்த்து. பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது.

"அன்றமரிற் சொற்ற வறவுரைவீழ் தீக்கழுது
மன்றுயர்ந்து போந்த வகைதேர்மின்—பொன்ற
அறமறிந்தோன் கண்ட வறம்பொருள்கேட் டல்லன்
மறமொழுக்க வாய்த்த வழக்கு."

இஃது அந்நூலின் பால்கள் நான்கனுள் முதற்பாலா கிய அறத்துப்பாலின் முதற் செய்யுள்.

இக் கார் நாற்பது பழைய வுரையோடு முன்னே சண்முகசுந்தர முதலியாரவர்களால் அச்சிடப்பட்டது. ஆனால், அதில் முதல் இருபத்திரண்டு செய்யுள்களும் ஈற்று இரண்டு செய்யுள்களும் ஆக இருபத்துநான்கு செய் யுள்களுக்கே அவ்வுரை காணப்படுகின்றது. இடையி

னுள்ள பதினாறு செய்யுள்களுக்கு உரை காணப்படவில்லை. அவ்வுரை பொழிப்புரை. அவ்வுரை இயற்றியவர் இன்னா ரென்று தெரியவில்லை. அவ்வுரையைத் தவிர அவ்விரு பத்துநான்கு செய்யுள்களுக்கும் பதவுரையும் விசேடவுரை யும் எழுதினேன்.

உரையில்லாத அப் பதினாறு செய்யுள்களிற் பல பிழைபட்டிருந்தன. எனக்குக் கிடைத்த வேறு இரண்டு கையெழுத்துப்பிரதிகளிலும மேற்கண்ட இருபத்து நான்கு செய்யுள்களுக்கே உரை யிருந்தது. ஆனால், அவ்வேடு களால் உரை யில்லாத செய்யுள்களிற் பன்னிரண்டு செய் யுள்களின் திருத்தமான பாடங் கிடைத்தது. அது கொண்டு அப் பன்னிரண்டு செய்யுள்களுக்கு உரை எழுதினேன். ம-ா-ா-ஸ்ரீ T. T. கனகசுந்தரம் பிள்ளை அவர்கள், B. A., தம்மிடமிருந்த கையெழுத்துப் பிரதியைக் கொண்டு எஞ் சிய (29, 30, 31, 32 ஆகிய) நான்கு செய்யுள்களின் திரு த்தமான பாடத்தைத் தெரிவித்து அவற்றிற்கு ஒருவாறு உரையுங் கூறினார்கள். அதுகொண்டு அந்நான்கு செய்யுள் களுக்கும் உரை எழுதி இந்நூலின் உரையை முடித்தேன். நான் சென்று கேட்டவுடன் இங்ஙனம் உதவிபுரிந்த மேற் படி பிள்ளையவர்களுக்கு யான் என் மனமார்ந்த வந்தனத் தைப் புரிகின்றேன். இதிற் காணப்படும் பிழைகளை நண்பர் கள் அன்போடு தெரிவிப்பார்களாயின் மறு பதிப்பில் அவற்றை அவர்கள் பெயர்களுடன் வெளியிடுவதோடு அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனத்தையும் புரியுங் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்;

கா. ர. கோ.

ஸ்ரீ

கடவுள் துணை

# கார் நாற்பது

## மூலமும் உரையும்

தோழி தலைமகட்குப் பருவங் காட்டி வற்புறீஇயது

1. பொருகடல் வண்ணன் புனைமார்பிற் றார்போற்
றிருவில் விலங்கூன்றித் தீம்பெயல் வீழ
வருது மெனமொழிந்தார் வாரார்கொல் வானங்
கருவிருந்தா லிக்கும் பொழுது.

(பதவுரை) பொரு - அலைகளை வீசுகின்ற, கடல்வண்ணன் - கடல்போன்ற கருநிறத்தினையுடைய பெருமான், மார்பில் - தனது மார்பில், புனை - அணிந்துள்ள, தார்போல் - மாலையைப்போல், வானம் - மேகமானது, திரு வில் - அழகாகிய இந்திரவில்லை, விலங்கு ஊன்றி - விலங்காக ஊன்றி, தீம் பெயல் - (தன்னிடத்திருந்து) இனிய நீர்த்தாரைகளை, வீழ - வீழ்விக்கையில், வருதும் என - வருவோம் என்று, மொழிந்தார் - சொன்ன தலைவர், வானம் - (அங்ஙனமே) அம் மேகம், கருவிருந்து - கருவினைக்கொண்டிருந்து, ஆலிக்கும்பொழுது - துளிகளைச் சொரிகையில், வாரார் கொல் - வாராரோ, (வருவார்).

(விசேடவுரை) பொருகடல் - வினைத்தொகைநிலைத்தொடர். கடல்வண்ணன் என்றது திருமாலை. ஊன்றி என்னும் வினையெச்சம் வீழ என்னும் வினையெச்சத்தைக் கொண்டு முடிந்

தது. 'வீழ' என்பது வீழ்விக்க என்னும் பிறவினைப் பொருளில் வந்த தன்வினை வினையெச்சம். கடல்வண்ணன் மார்பிற்றுர். இந் திரவில் விலங்காக வூன்றற்குவமை. விலங்காக வூன்றுதல் - குறுக்காக வூன்றுதல். வருதும் என்பது தும்மீற்றுத் தன்மைப் பன்மை வினைமுற்று; இது தலைவன் கூற்றாகக் கூறப்பட்டமை யின் தனித் தன்மைப் பன்மை வினைமுற்றென்க. கருவிருந்து என்றவிடத்து இரண்டனுருபும், கொண்டு என்னும் வினையும் வருவித்தது இசையெச்சம்; அவ் வுருபும் பயனுந் தொக்கதொகை யன்று. ஆலிக்கும் என்னும் பெயரெச்ச வினையில் ஆலி என் னும் பெயர்ச்சொல் பகுதி. ஊன்றி என்னும் வினையெச்சத் திற்கும் வினைமுதல் வேண்டுமாகலின் வானம் என்பது அதற்கு முன்னுங் கூறப்பட்டது.

## இதுவுமது

2. கடுங்கதிர் நல்கூரக் கார்செல்வ மெய்த
நெடுங்காடு நேர்சினை யீனக்—கொடுங்குழை
யின்னே வருவர் நமரென் றெழில்வான
மின்னு மவர்தூ துரைத்து.

(ப - ரை) கொடுங் குழை - வளைவாகிய காதணியையுடை யாய்!, எழில் வானம்-அழகினையுடைய மேகம், கடுங்கதிர்-கொடுமை யாகிய கிரணங்களையுடைய சூரியன், நல்கூர-வறுமையடையவும், கார் - கார்காலம், செல்வம் எய்த-செல்வம் பெறவும், நெடுங்காடு - பெரிய காடு, நேர் - தன்பாற் பொருந்திய, சினை ஈன - பூவரும்பு களை ஈனவும் (வந்து), நமர் - நமது தலைவர், இன்னே வருவர் என்று - இப்பொழுதே வருவாரென்று, அவர் தூது உரைத்து - தூதாகி (அவரது வருகையைத்) தெரிவித்து, மின்னும்-மின்னு கின்றது.

(வி - ரை) கடுங்கதிர், கொடுங்குழை என்னு மிரண்டும் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைப் பெயர்கள்; இவை விரியின் கடுமையாகிய கதிர்களையுடையான், கொடுமையாகிய குழையையுடையாள் என்றும். கூர, எய்த, ஈன என்பன செவ்வெண்; இவ்வெண் ஈண்டு வினையோடு வந்தது. வந்து, ஆகி என்பன தந்துரைக்கப்பட்டன; இவை சொல்லெச்சங்கள். நமர் - பொருளடியாய்ப் பிறந்த பெயர்; இதில் நாம் - பகுதி, அது நம் எனத் திரிந்தது. செய்யும் என்னு முற்று ஈண்டு நிகழ்காலத்தை யுணர்த்தியது.

பருவங்கண் டழிந்த தலைமகளாற்றல் வேண்டித் தோழி தனதாற்றமை தோன்ற வுரைத்தது

3. வரிநிறப் பாதிரி வாட வளிபோழ்ந்த
விளமணற் றண்புறவி னாலி—புரள
வுருமிடி வான மிழியு மெழுமே
நெருந லொருத்தி திறத்து.

(ப - ரை) உரும் இடி வானம் - இடி இடியாநிற்கும் மேகம், நெருநல் - நேற்றிலிருந்து, ஒருத்தி திறத்து - ஒருத்தியிடத்து (அவள் வருந்தும்படி), வரி நிறம் - வரிநிறத்தையுடைய, பாதிரி வாட-பாதிரிப்பூ வாடவும், வளி போழ்ந்த-காற்றினால் ஊடறுக்கப்பட்ட, இள மணல் - இளமணலையுடைய, தண் புறவின்-தண்ணிய காடுகளில், ஆலி புரள - ஆலாங்கட்டி புரளவும், இழியும் - இழியாநின்றது, எழும் - எழாநின்றது.

(வி-ரை) 'ஒருத்தி திறத்து' என்றதற்கு 'தனியாளிடத்து' என்றுரைத்தலுமாம். 'அந்தோ இதற்கு என்செய்வேன்' என்பது இசையெச்சம்.

### தோழி பருவங் காட்டித் தலைமகளை வற்புறுத்தியது

4. ஆடு மகளிரின் மஞ்ஞை யணிகொளக்
காடுங் கடுக்கை கவின்பெறப் பூத்தன
பாடுவண் டூதும் பருவம் பணைத்தோளி
வாடும் பசலை மருந்து.

(ப - ரை) பணைத்தோளி - மூங்கில் போன்ற தோளையுடையாய்!, மஞ்ஞை - மயில்கள், ஆடும் - கூத்தாடும், மகளிரின் - மாதர் போல, அணி கொள - அழகு பெறவும், காடும் - காடுகளும், கவின் பெற - அழகு பெறவும், கடுக்கை - கொன்றைமலர்கள், பூத்தன - பூத்தன; பாடு வண்டு - பாடுகின்ற வண்டுகள், ஊதும் - அப் பூக்களில் ஊதாநின்றன; (ஆதலால்), பருவம் - இப் பருவமானது, வாடும் - நீ வருந்துதற்குக் காரணமாகிய, பசலை - பசலை நிறமாகிய நோயைப் போக்குதற்கு, மருந்து - மருந்தாகும்

(வி - ரை) மயில்கள் வாளா யிருக்குங் காலத்தைவிடத் தோகைகளை விரித்தாடுங் காலத்திலே மிகவும் அழகாயிருக்கும்; ஆகையால், 'ஆடு மகளிரின் மஞ்சை யணிகொள' என்றதற்குக் 'கூத்தாடு மாதரைப்போல மயில்களாட' என்பதே கருத்தாமெனக் கொள்க. மகளிரின் என்பதில் இன் ஒப்புப்பொருளதாகிய ஐந்தனுருபு. பாடு வண்டு - வினைத்தொகைநிலைத்தொடர். ஊதும் - ஊண்டு நிகழ்கால முணர்த்தியது. பருவம் - இவற்றிற் கெல்லாங் காரணமாகிய இப் பருவம் என்க. பசலை மருந்து - பசலைக்கு மருந்து என்க. பருவத்தை மருந்தாக உருவகஞ் செய்ததற் கேற்பப் பசலை என்றதற்குப் பசலையாகிய நோய் எனப் பொருள் கூறப் பட்டது.

### இதுவுமது

5. இகழுநர்ச் சொல்லஞ்சிச் சென்றார் வருதல்
பகழிபோ லுண்கண்ணாய்! பொய்யன்மை யீண்டைப்.

பவழஞ் சிதறி யவைபோலக் கோபம்
தவழுந் தகைய புறவு.

(ப - ரை) பகழிபோல் - அம்புபோன்ற, உண் கண்ணாய் - மையுண்ட கண்ணையுடையாய்!, ஈண்டை - இவ்விடத்து, புறவு - காடுகள், சிதறியவை பவழம்போல - சிதறியிருப்பனவாகிய பவழங்கள்போல, கோபம் - இந்திரகோபங்கள், தவழும் - தவழாநிற்கும், தகைய - தன்மையை யுடையனவாயின; (ஆதலால்), சென்றார் - பொருட்குச் சென்ற நந்தலைவர், இகழுநர் - இகழ்பவர்களுடைய, சொல் அஞ்சி - சொல்லுக்குப் பயந்து, வருதல் - வருவது, பொய் அன்மை - பொய்யல்லாமையாகும்.

(வி - ரை) இகழுநர் என்பதில் இகழ் - பகுதி, உ-சாரியை, ந் - பெயரிடைநிலை, அர் - பலர்பால் விகுதி; இஃதீண்டுக் குறிப்பு வினைப்பெய ராயிற்று. சென்றார் என்பது தெரிநிலை வினையாலணையும் பெயர். பவழஞ் சிதறியவை என்பதைச் சிதறியவை பவழம் என மாற்றிக்கொள்க; இது இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். சிதறியவை - வினையாலணையும் பெயர்.

இதுவுமது

6. தொடியிட வாற்றா தொலைந்ததோ ளுக்கி
வடுவிடை போழ்ந்தகன்ற கண்ணாய்! வருந்தல்
கடிதிடி வான முரறும் நெறியிடைச்
சென்றாரை நீடின்மி னென்று.

(ப - ரை) வடு-மாவடுவை, இடை போழ்ந்த - இடையிற் பிளந்தாற்போன்ற, அகன்ற - விசாலமாகிய, கண்ணாய் - கண்களையுடையாய்!, கடிது இடி வானம்-கடிதினிடிக்குமேகம்,நெறியிடைச் சென்றாரை-(நெடிய) வழியிற் சென்ற நந்தலைவரை, நீடின்மின் -

தாமதஞ் செயன்மின், என்று-என்று சொல்லி, உராும்-முழங்கா நின்றது; (ஆதலால்), தொடி இட - வளையல்களை யிடுதற்கும், ஆற்ரு - ஆற்ருதனவாய், தொலைந்த - தளர்ந்த, தோள் நோக்கி தோளைப் பார்த்து, வருந்தல் - வருந்தற்க.

(வி - ரை) உரறல் - ஒலித்தல்; இஃது இப்பொருளதாதலை "உருமுரறுகருவிய பெருமலை" என்னு மலைபடுகடாத்தின் முந் நூற்றைம்பத்தேழாம் அடியின் உரையால் அறிக. தொடி-தொடுக் கப்படுவது; இதில் இ - செயப்படுபொருண்மை விகுதி. இடவும் என்னும் இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரமாய்த் தொக்கது. ஆற்ரு - வினையெச்சப்பொருளில் வந்த பலவின்படர்க்கை வினை முற்று. போழ்ந்த அகன்ற என்னுந் தொடர், நிலைமொழியிற் றகரங் கெட்டுப் 'போழ்ந்தகன்ற' என்ருயிற்று. வருந்தல் - எதிர்மறைப் பொருளில் வந்த அல்லீற்று வியங்கோண் முற்று. வானம் - இட வாகுபெயர். உராும் என்னுஞ் செய்யுமென் முற்று ஈண்டு நிகழ் காலத்தை யுணர்த்திற்று. நீடின்மின் என்பதில் நீடு - பகுதி, உக ரக்கேடு சந்தி, இல் - எதிர்மறை விகுதி, லகரம் னகரமானது சந்தி, இவை யனைத்து மோர்பகுதி, மின் - ஏவற்பன்மை விகுதி.

இதுவுமது

7. நச்சியார்க் கீதலு நண்ணார்த் தெறுதலுந்
தற்செய்வான் சென்ருர் தருஉந் தளரியல்!
பொச்சாப் பிலாத புகழ்வேள்வித் தீப்போல
வெச்சாரு மின்னு மழை.

(ப-ரை) தளர் இயல்-தளர்ந்த இயல்பினையுடையாய்!, பொச் சாப்பு இலாத-(வைதிகர் யாவராலும் என்றும்) மறக்கப்படுதலில் லாத, புகழ் - புகழையுடைய, வேள்வித் தீப்போல - வேள்வியின் தீயைப்போல, எச்சாரும் - எல்லாப் பக்கங்களிலும், மின்னும்-

மின்னுகின்ற, மழை - மேகம், நச்சியார்க்கு - தம்மை விரும்பினவர்களுக்கு, ஈதலும்-கொடுத்தலும், நண்ணார்-பகைவர்களை, தெறுதலும் - அழித்தலும் (ஆகிய விரண்டும்), தற்செய்வான் - தம்மை நிலைநிறுத்துதற்பொருட்டாம் என்று கருதி, சென்றார்-(பொருளை நாடிச்) சென்ற நந்தலைவரை, தரும் - கொண்டுவந்து தரும்.

(வி - ரை) நச்சியார், நண்ணார், சென்றார் என்பன வினையாலணையும் பெயர்கள். தற்செய்வான் என்பதில் தன் என்பது பன்மை வாய்பாட்டில் ஒருமை வாய்பாடு வந்த வழுவமைதி. செய்வான் என்பது வானீற்று வினையெச்சம். 'ஆம் என்று கருதி' என்பது இசையெச்சம். தளரியல் - வினைத்தொகைநிலைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைப்பெயர்; இது விரியின் தளர்ந்த வியல்பினையுடையவள் என்றாம். பொச்சாப்பு - செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த செய்வினைத் தொழிற்பெயர். தரூஉம் என்னும் இன்னிசை யளபெடை ஈண்டலகுபெற்றது. செய்யுளிசை யளபெடை எங்கும் அலகுபெற்றே வருமெனவும், இன்னிசை யளபெடையும் சொல்லிசை யளபெடையும் அலகு பெற்றும் பெறாதும் வருமெனவுங் கொள்க. பொச்சாப்பிலாத புகழ்வேள்வித்தீ எச்சாரும் விளங்குதல்போல எச்சாரு மின்னு மழை என்க. மின்னும்- பெயரெச்ச வினை. 'தளரியலாய்' என்றும் பாடம்.

## இதுவுமது

8. மண்ணியன் ஞாலத்து மன்னுபுகழ் வேண்டிப்
பெண்ணிய னல்லாய்! பிரிந்தார் வரல்கூறும்
கண்ணிய லஞ்சனந் தோய்ந்தபோற் காயாவு
நுண்ணரும்பு பூத்த புறவு.

(ப - ரை) பெண் இயல் நல்லாய் - பெண்களுக்கு இன்றியமையாத இயலையுடைய நல்லாய்!, கண் இயல்-கண்ணுக்கியற்றப்

பட்ட, அஞ்சனம் தோய்ந்தபோல்-மை தோய்ந்தாற்போல, காயா வும்-காயாக்களும், நுண் அரும்பு - சிறிய அரும்புகளை, பூத்த - தோற்றுவித்த, புறவு-காடுகள், மண் இயல் ஞாலத்து - மண் பொருந்திய பூமியில், மன்னு புகழ் வேண்டி - நிலைநிற்கும் புகழை விரும்பி, பிரிந்தார் வரல் - (பொருளின் பொருட்டுப்) பிரிந்த நந் தலைவர் வருதலை, கூறும் - சொல்லாநின்றன.

(வி - ரை) 'நீ வருந்தற்க' என்பது இசையெச்சம். ஞாலம் - பூமி; மண்ணியல் என்றது இனச்சுட்டில்லாத அடை என்க; என்னை? பொன் முதலியன இயன் ஞாலம் வேறு இன்மையின் இதனைத் தன்னோடு இயைபின்மை நீக்கிய விசேடணம் எனவுங் கூறுப. ஞாலத்துள் அப்பு முதலிய பிற பூதங்களின் கூறுகளு முள வேனு மிக்கிருப்பது பிருதிவியின் கூறாகலின் 'மண்ணியன் ஞாலம்' என்றார்; இதுபற்றியே வடமொழியாளரும் ஞாலத்தைப் பிருதுவி என்று கூறுப. மண்ணியல் என்றது எழுவாய்த் தொடர்; இதனை மண்ணுலியன்ற எனப் பொருள்கொண்டு மூன்றன்றொகை யென்றலுமாம். பெண்ணியல் - பெண்களுக்குரிய இலக்கணம்; அது நாணுடைமை; அதனை, "ஊர்நா ணியல்பினாள்" என்றதனா லறிக. "காமுற்ற, பெண்ணுக் கணிகல நாணுடைமை" என நாணைப் பெண்களுக் கணியாகக் கூறினார் திரிகடுக நூலாசிரியர். ஈண்டுப் பெண் என்றது சாதியொருமை. 'பெண் இயல்' என்பதற்குப் 'பெண்டன்மை இயன்ற' என்றுரைத்தலுமாம்; இப் பொருளிற் பெண் என்பது பெண்ணின் தன்மைக்கானமையின் பொருளாகு பெயர். பிரிந்தார் வரல் - எழுவாய்த்தொடர். கண்ணியல் என்பது நான்கன்றொகை. இயல் என்பது செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த காலங் கரந்த செய்வினைப் பெயரெச்சம். தோய்ந்ததுபோல் என்பது ஈறு தொக்குத் 'தோய்ந்தபோல்' என்றாயிற்று; தோய்ந் தாற்போல் என்பது அங்ஙனமாயிற்று என்பதுமாம்.

இதுவுமது

9. கருவிளை தண்மலர்போற் பூத்தன கார்க்கேயுற்
றெரிவனப் புற்றன தோன்றி—வரிவளை
முன்கை யிறப்பத் துறந்தார் வரல்கூறு
மின்சொற் பலவு முரைத்து.

(ப-ரை) தண் மலர்போல்-குளிர்ச்சியாகிய மலரைப்போல, பூத்தன - பூத்தனவாகிய, கருவிளை - கருவிளைகளுக்கும், கார்க்கு உற்று - கார்ப்பருவத்தை எதிர்ந்து, எரி வனப்பு - நெருப்பினது அழகை, உற்றன - அடைந்தனவாகிய, தோன்றி-தோன்றிப்பூக்களும், வரி வளை - வரிகளையுடைய வளையல்கள், முன்கை இறப்ப-முன்கையினின்றும் நீங்கும்படி, இன் சொல் பலவும் உரைத்து-இனியசொற்கள் பலவற்றையுஞ் சொல்லி, துறந்தார்-போன நம் தலைவர், வரல் கூறும் - வருதலைக் கூறாநிற்கின்றன, (ஆகையால் நீ வருந்தற்க.)

(வி - ரை) பூத்தன, உற்றன என்பன வினையாலணையும் பெயர்கள். பூத்தன கருவிளை, உற்றன தோன்றி என இயைத்துப் பொருள் கொள்க; இவ்விரு தொடரும் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத் தொடர்கள். கையிறப்ப - நீக்கப்பொருளதாகிய ஐந்தன் றொகை.

இதுவுமது

10. வானேறு வானத் துரற்ற வயமுர
ணேனற் றெருத்த லதனோ டெதிர்செறுப்பக்
கான்யாற் றொலியிற் கடுமான்றே றென்றோழி!
மேனி தளர்ப்ப வரும்.

(ப-ரை) என் தோழி-என்னுடைய தோழியே!, வான் ஏறு - மழை ஏறு, வானத்து உரற்ற - மேகத்திலிருந்து ஒலிப்ப, வயம்

முரண் - வலியையும் மாறுபாட்டையு முடைய, ஆன் ஏற்று ஒருத்தல் - ஆனேறுகிய ஒருத்தல்கள், அதனோடு-அம் மழையேற்றோடு, எதிர் செறுப்ப - எதிராளி வெருள (அதுகண்ட நமது காதலாது), கடு மான் தேர் - விரைவினையுடைய குதிரைகளைப் பூட்டிய தேரானது, மேனி தளிர்ப்ப-உனது மேனி தளிர்க்கும்படி, கான் யாற்று ஒலியின்-காட்டாற்றின் ஒலியைப்போல (ஒலி செய்துகொண்டு), வரும் வாராநின்றது.)

(வி - ரை) வானேறு - இடி. வானம் இடவாகுபெயராய் மேகத்தை யுணர்த்தியது. ஆகி - சொல்லெச்சம். கான்யாற்றி னொலி தேர்வருதலாலாகும் ஒலிக் குவமம். செறுப்ப - காரணப் பொருளதாதலின் இறந்தகாலத்தைக் காட்டிற்றென்க. வானேற் றோடு ஆனேற் றொருத்தல், எதிர்செறுத்தல் தேர்வருதற்குக் காரண மென்க. ஆனேற் றொருத்தல் என்பதில் ஏறு என்பதும் ஒருத்தல் என்பதும் ஆண் என்னும் பொருளதாதலின் ஒரு பொருட் பன்மொழி. தளிர்ப்ப - காரியப்பொருளதாதலின் எதிர் காலங் காட்டிற் றென்க.

இதுவுமது

11. புணர்தரு செல்வந் தருபாக்குச் சென்றார்
வணரொலி யைம்பாலாய் ! வல்வருதல் கூறு
மணர்த்தெழு பாம்பின் றலைபோற் புணர்கோடல்
பூங்குலை யீன்ற புறவு.

(ப - ரை) வணர் ஒலி - வளைந்து தழைத்த, ஐம்பாலாய்-ஐம் பாலினை யுடையாய்!, மணர்த்து எழு- அண்ணாந்தெழுந்த, பாம்பின் தலைபோல் - பாம்பினது படம்போல, புணர் கோடல்-பொருந்திய வெண்காந்தள்கள், பூங்குலை ஈன்ற - அழகிய குலை ஈனப்பெற்ற, புறவு - காடுகள், புணர்தரு - பொருந்திய, செல்வம் தருபாக்கு -

செல்வத்தைக் கொள்ள, சென்றார்-சென்ற தலைவர், வல் வருதல்-விரைந்து வருதலை, கூறும் - கூறாநின்றன.

(வி-ரை) ஒலித்தல்-தழைத்தல்; இதனை "ஒலி நெடும்பீலி" என்னும் நெடுநல்வாடையின் தொண்ணூற்றெட்டாம் அடியில் வருந் தொடரின் உரையால் அறிக. தருபாக்கு இதிற் பாக்கு வினையெச்ச விகுதி. சென்றார் - வினையாலணையும் பெயர். வணர்ந்து என்பதில் விகுதியும் இடைநிலையுங் தொக்கு வணர் என நின்றது; இது 'வரிப்புனை பந்து' என்பது போன்றது. ஐம்பால் - பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; இது ஐந்தாகிய பகுதியினை யுடையது; ஐந்துவிதமாக முடிக்கப்படுவது என்பது இதன் பொருள். ஈன்ற - செயப்பாட்டு வினைப்பொருளதாகிய செய்வினைப் பெயரெச்சம்.

இதுவுமது

12. மையெழி லுண்கண் மயிலன்ன சாயலாய்!
ஐயந்தீர் காட்சி யவர்வருதல் திண்ணிதால்
நெய்யணி குஞ்சரம் போல இருங்கொண்மூ
வைகலு மேரு வலம்.

(ப - ரை) எழில் - அழகாகிய, மை உண் கண் - மையுண்ட கண்ணையும், மயில் அன்ன சாயலாய் - மயிலையொத்த சாயலையு முடையாய்!, நெய் அணி குஞ்சரம்போல-நெய்யை யணிந்த யானைகளைப்போல, இருங்கொண்மூ-பெரிய முகில்கள், வைகலும் வலம் ஏரும் - நாடோறும் வலமாக எழாநின்றன; (ஆதலான்), ஐயந்தீர் காட்சியவர் - சந்தேகம் நீக்கிய அறிவினையுடைய நமது காதலர், வருதல் திண்ணிது - வருதல் மெய்ம்மையாம்.

(வி - ரை) ஏர்தல் - எழுதல்; இஃது இப்பொருளதாதலை "வையகம் பனிப்ப வலனேர்பு" என நெடுநல்வாடையினும், "பாடி

மிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு" என முல்லைப்பாட்டினும், "உலக முவப்ப வலனேர்பு" எனத் திருமுருகாற்றுப்படையினும் உள்ளவற்றின் உரையைக் கண்டுணர்க. ஆல் - அசை.

இதுவுமது

13. ஏந்தெழி லல்குலா யெமார்ந்த காதலர்
கூந்தல் வனப்பிற் பெயறாழ—வேந்தர்
களிறெறி வாளரவம் போலக்கண் வவ்வி
யொளிறுபு மின்னு மழை.

(ப-ரை) எழில் ஏந்து அல்குலாய் - அழகேந்திய அல்குலினை யுடையாய்!, எம் ஆர்ந்த காதலர்-(துணைவரோடு பொருந்தி) இன்ப முற்ற காதலையுடையவர்களாகிய மகளிரது, கூந்தல் வனப்பில் - கூந்தலினது அழகுபோல, பெயல் தாழ-நீர்த்தாரைகளைப் பெய்ய, வேந்தர் களிறு எறி-அரசர்கள் களிற்றின்மேல் வீசிய, வாள் அரவம்போல - வாளினது ஒளியைப்போல, கண் வவ்வி - கண்டார் கண்களைப் பறித்து, ஒளிறுபு - ஒளிவிட்டு, மழை மின்னும்-மேக மின்னு நின்றது, (ஆதலால் நம் காதலர் வருவர்.)

(வி-ரை) அரவம் - ஒளி. நீர்த்தாரைகளுக்கு மகளிர் கூந்த லுவமம். மேக மின்னுதற்குக் களிறெறிந்த வாளரவ முவமம். காதலர் - காதலையுடைய மகளிர். பெயல்-தொழிற்பெயர்; இது தொழி லாகுபெயராய் நீர்த்தாரைகளை யுணர்த்தியது. தாழ - தாழ்விக்க என்னும் பிறவினைப் பொருளதாகிய தன்வினை வினையெச்சம்.

இதுவுமது

14. செல்வந் தரல்வேண்டிச் சென்றநங் காதலர்
வல்லே வருத றெளிந்தாம் வயங்கிழாய் !
முல்லை யிலங்கெயி றீன நறுந்தண்கார்
மெல்ல வினிய நகும்.

(ப - ரை) வயங்கு இழாய் - விளங்குகின்ற ஆபரணங்களை யுடையாய்!, முல்லை - முல்லைக்கொடிகள், இலங்கு எயிறு ஈன - விளங்குகின்ற (மகளிர்தம்) பற்களைப்போன்ற அரும்புகளை யீனும் படி, நறும் தண் கார் - அழகிய குளிர்ந்த மேகங்கள், இனிய - இனியனவாய், மெல்ல நகும் - மெதுவாக ஒலியாநின்றன; (அதனால்), செல்வம் தரல் வேண்டி-பொருளைத் தேடிக்கொள்ளுதலை விரும்பி, சென்ற நம் காதலர்-போன நமது தலைவர், வல்லே வருதல் - விரைவாக வருதலை, தெளிந்தாம் - நிச்சயித்துணர்ந்தோம்.

(வி-ரை) வயங்கிழாய்-இது விளிவேற்றுமை; இதன் முதல் வேற்றுமை வயங்கிழை; இது வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைப்பெயர். இனிய - குறிப்பு முற்றெச்சம். மெல்ல-குறிப்புப் பெயரெச்சம்.

இதுவுமது

15. திருந்திழாய்! காதலர் தீர்குவ ரல்லர்
குருந்தின் குவியிண ருள்ளுறை யாகத்
திருந்தி னிளிவண்டு பாட விருந்தும்பி
யின்குழ லூதும் பொழுது.

(ப - ரை) திருந்து இழாய் - திருந்திய ஆபரணத்தினை யுடையாய்!, வண்டு - வண்டுகள், குருந்தின் - குருந்தினது, குவி இணர் உள் - குவிந்த இணரினது உள்ளிடத்தை, உறை ஆக - தமக்கு உறைவிடமாகக் கொண்டு, திருந்து இன் இளி பாட - திருந்திய இனிமையாகிய இளி என்னும் பண்ணைப் பாட, இரும் தும்பி - பெரிய தும்பிகள், குழலின் - குழல்போல, ஊதும்பொழுது - ஊதாநின்ற இக் காலத்தில், காதலர் - நம்முடைய தலைவர், தீர்குவர் அல்லர் - நம்மை நீங்குவாரல்லர்.

(வி - ரை) திருந்திழாய் - விளிவேற்றுமை; இதன் முதல் வேற்றுமை திருந்திழை; இது வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைப்பெயர். இணர் - பூங்கொத்து. உள்-இஃது ஈண்டு இடப்பெயராக நின்றது. உறை - முதனிலைத் தொழிற் பெயர்; இஃது ஈண்டுத் தொழிலாகுபெயராய் உறைதற்குரிய இடத்தை யுணர்த்திற்று. பாட - இஃது ஈண்டுக் காரணப்பொருளும், காரியப்பொருளும் இன்றி வந்தமையின் நிகழ்காலங் காட்டிற்று.

## இதுவுமது

16. கருங்குயில் கையற மாமயி லாலப்
பெருங்கலி வான முரறும்—பெருந்தோ
ளசோகி னிளந்தளி ரன்னநின் மேனிப்
பசலைப் பழங்கண் கொள.

(ப-ரை) பெருந்தோள்-பெரிய தோளினையுடையாய்!, அசோகின் இளம்தளிர் அன்ன-அசோகமரத்தினது இளமையாகிய தளிரையொத்த, நின் மேனி - உனது தேகத்தில், பசலை-பொன்னிறமும்,பழங்கண்-மெலிவும், கொள-உண்டாகவும், கரும் குயில் - கருமையாகிய குயில்கள், கையற - செயலற்றிருக்கவும், மா மயில்-அழகிய மயில்கள், ஆல - ஆடவும், பெரும் கலி - பெரிய ஒலியினையுடைய, வானம் - மேகங்கள், உரறும் - முழங்குகின்றன, (ஆதலால் நந்தலைவர் வருவர்.)

(வி - ரை) கையற: இதிற் கையறு - பகுதி; கையறல்-செயலறல். உரறும் - செய்யுமுன் முற்று; இதில் உரறு - பகுதி. பசலையும் பழங்கண்ணையு மேனி கொள என மேனியை எழுவாயாக்கிக் கூறினுமாம்

இதுவுமது

17. அறைக்க லிருவரை மேற்பாம்பு சவட்டிப்
பறைக்குர லேறொடு பௌவம் பருகி
யுறைத்திருள் கூர்ந்தன்று வானம் பிறைத்தகை
கொண்டன்று பேதை நுதல்.

(ப - ரை) பேதை - பேதையே!, வானம் - மேகமானது, பௌவம் பருகி-கடல்நீரை யுண்டு, பறைக்குரல் ஏறொடு-பறையைப் போன்ற ஒலியையுடைய இடியோடு நின்று, பாம்பு சவட்டி - பாம்புகளை வருத்தி, அறைக்கல் இருவரைமேல் உறைத்து - அறைக்கலிருவரைமேற் பெய்து, இருள் கூர்ந்தன்று - இருள் மிக்கது; (ஆதலால்), நுதல் - உனது நெற்றி, பிறைத்தகை-பிறையின் தன்மையை, கொண்டன்று - கொண்டது.

(வி - ரை) பேதை! வானம் பௌவம் பருகி, பறைக்குரலேறொடு பாம்பு சவட்டி அறைக்க லிருவரைமேல் உறைத்திருள் கூர்ந்தன்று; (ஆதலால் நின்) நுதல் பிறத்தகை கொண்டன்று என் இயைக்க. குரல் - இடவாகுபெயராய் ஒலியை யுணர்த்திற்று. உறைத்து - இதில் துளி என்னும் பொருளதாகிய உறை என்னும் பெயர்ச்சொல் பகுதி. உறை என்பது உறைதல் என்னும் பொருளதாகிய முதனிலைத் தொழிற்பெயர்; அஃது அவ் வாகுபெயராய் உறைதலை (துளி கட்டிப்போதலை) உடைய நீரை யுணர்த்த, அது அதன் பகுதியாகிய துளியை முதலாகுபெயரா யுணர்த்திற்றென்க. வானம் இருள் கூர்ந்தன்று என இயைதலின் இருள்கூர்ந்தன்று என்பது ஈண்டு ஒருசொல்லின் தன்மைத்து; இதில், இருள்கூர்- பகுதி; இருள்-எழுவாய், கூர்ந்தன்று பயனிலை என்னலாகாதோ எனின், ஆகாது; என்னையெனின், அங்ஙனங் கூறின் வானம் என்னும் எழுவாய்க்கு முடிபின்றாம் ஆதலின் என்பது. ஏறொடு என்ற விடத்து நின்ற என்றது சொல்லெச்சம்.

### இதுவுமது

18. கல்பயில் கானங் கடந்தார் வரவாங்கே
நல்லிசை யேறொடு வான நடுநிற்பச்
செல்வர் மனம்போலக் கவினீன்ற நல்கூர்ந்தார்
மேனிபோற் புல்லென்ற காடு.

(ப-ரை) கல் பயில் - மலைகள் நெருங்கிய, கானம் கடந்தார் - காடுகளைக் கடந்து சென்றவர், வர - வரும்படி, ஆங்கு - அவர் வர வேண்டிய காலம் வந்தவிதமாகவே, வானம் - மேகமானது, நல் இசை - மிக்க ஓசையையுடைய, ஏறொடு - இடியோடு தோன்றி, நடு நிற்ப-உலகங்களுக்கெல்லாம் ஒப்ப நிற்றலால், நல்கூர்ந்தார் - வறுமையுற்றவர்களது, மேனிபோல் - தேகத்தைப்போல, புல் என்ற காடு-(முன்னே) புல் என்றிருந்த காடுகள் (இப்பொழுது), செல்வர் மனம்போல - பொருளுடையவர்களின் மனம்போல், கவின் ஈன்ற - அழகைத் தந்தன.

(வி-ரை) நல் இசை: இதில் 'நல்' என்பது 'மிகுதி' என்னும் பொருள் தந்தது, நல்ல வெய்யில் என்பதிற்போல. நிற்ப-இவ்வகர வீற்று வினையெச்சம் ஈண்டுக் காரணப்பொருளில் நிற்றலின் இறந்தகாலங் காட்டிற்றென்க; இதில் நில் - பகுதி, லகரமெய் றகர மெய்யானது சந்தி, ப்-எழுத்துப்பேறு, அ - விகுதி. ஆங்கு - அந்த விதமாகவே, அதாவது தலைவர் வரவேண்டிய காலந் தோன்றிய விதமாகவே என்பது.

### வினை முற்றிய தலைமகன் பாகற்குச் சொல்லியது.

19. நாஞ்சில் வலவ னிறம்போலப் பூஞ்சினைச்
செங்கான் மராஅந் தகைந்தன பைங்கோற்
றொடிபொலி முன்கையா டோடுணையா வேண்டி
நெடுவிடைச் சென்றதென் னெஞ்சு.

(ப-ரை) பூஞ்சினை - அழகிய கொம்புகளையும், செம் கால் - செம்மையாகிய தாள்களையுமுடைய, மராம் - மராமரங்கள், நாஞ்சில் - கலப்பைப் படையினையுடைய, வலவன்-வென்றியையுடைய பலராமனது, நிறம்போல - நிறத்தைப்போல, தகைந்தன - விரிந்தன; (ஆதலால்), பைங்கோல் தொடி - பசுமையாகிய அழகிய வளையல்கள், பொலி-பொலியாநின்ற, முன் கையாள் - முன்னங்கையை யுடையாள்தன், தோள் - தோள்கள், துணை ஆ வேண்டி - எனக்குத் துணையாதலை விரும்பி, என் நெஞ்சு - என் மனம், நெடு இடைச் சென்றது - நெடிய காடாகிய இடத்தைக் கடந்து சென்றது.

(வி-ரை) மராஅம்-இது செய்யுளிசை யளபெடை. தொடி; இது (தொடுக்கப்படுவது என்னும் பொருளதாதலின் இதில் இ - செயப்படுபொருண்மை விகுதி, ஆ - இது ஆக என்பதன் ஈறு தொக்க செயவென் வினையெச்சம்; இஃது ஈண்டு ஆதல் என்னும் தொழிற்பெயர்ப்பொருளதாய் வேண்டி என்னும் வினையின் செயப்படுபொருளாய் நின்றது. நெடுவிடை - இதனை நெடுமை + இடை எனப் பிரிக்க; இது பண்புத்தொகைநிலைத்தொடர்மொழி; இதில் இடையில் நிற்கு நிலத்தை இடை என்றதோ ராகுபெயர்.

நெடு என்பதும் இடை என்பதுங் கூடி நெடு என்பதன் ஆதி நீண்டு நேடிடை என்றாயினும், நெடு என்பது தன்னொற்றிரட்டி நெட்டிடை என்றாயினும் ஈண்டுத் தளை பிழைக்குமாகலான் அவற்றை நடுவண் வ[illegible]படுமெய் புணர்த்தி நெடுவிடை என வைத்தார் என்க.

இதுவுமது

20. வீ[illegible]ல் வே[illegible]ன் வினையு முடிந்தன
வாறும் பதமினிய வாயின—வேறோ

டருமணி நாக மனுங்கச் செருமன்னர்
சேனைபோற் செல்லு மழை.

(ப-ரை) வீறு சால் வேந்தன் - சிறப்பு மிக்க அரசனது, வினையும் முடிந்தன - காரியங்களும் முடிந்தன; ஆறும் - வழிகளும், இனிய பதம் ஆயின - செவ்விய பதத்தினை யுடையனவாயின; மழை - மேகங்கள், அரு மணி - அருமையாகிய இரத்தினங்களையுடைய, நாகம் அனுங்க - பாம்புகள் வருந்தும்படி, செரும் மன்னர் - போர் செய்யும் அரசர்களுடைய, சேனை போல் - சேனைகளைப்போல, ஏறோடு செல்லும் - உருமேற்றோடுங் கூடிச் செல்லாநின்றன.

(வி-ரை) அனுங்க: இதில் அனுங்கு - பகுதி. செருமன்னர்- இது பெயரெச்சத்தொடர்; செரும் மன்னர் என்பது மவ்வொற்றழிந்து செருமன்னர் என்றாயிற்று; அன்றிச் செருமன்னர் எனவே வைத்து வினைத்தொகைநிலைத்தொடர் என்றேனும், செருநிலையுடைய மன்னர் எனக் கொண்டு இரண்டன் உருபும் பயனும் உடன்தொக்க தொகை யென்றேனுங் கொள்ளுதலுமாம்.

இதுவுமது

21. பொறிமாண் புனைதிண்டேர் போந்த வழியே
சிறுமுல்லைப் போதெல்லாஞ் செவ்வி—நறுநுதற்
செல்வ மழைத்தடங்கட் சின்மொழிப் பேதைவாய்
முள்ளெயி றேய்ப்ப வடிந்து.

(ப-ரை) பொறி - எந்திரங்களாலான, மாண் - மாட்சிமையினையுடைய, புனை - அலங்கரிக்கப்பட்ட, திண் - வலிவாகிய, தேர் போந்த வழி - தேர் சென்ற வழிகளில், சிறு முல்லைப் போது எல்லாம் - சிறிய முல்லைப் புஷ்பங்கள் யாவும், நறு நுதல் - அழகிய நெற்றியினையும், செல்வம் - உலகத்தின் செல்வத்திற்குக் காரணமாகிய,

ம்மழை - மேகத்தைப்போலுங் கருமை வாய்ந்த, தடம் கண்-விசால மாகிய கண்களையும், சின் மொழி - மழலை மொழிகளையுமுடைய, பேதை வாய்-பேதையின் வாயின்கண் உள்ள, முள் எயிறு எய்ப்ப-முள்ளைப்போன்ற பற்களைப்போல, வடிந்து - வடிவுகொண்டு, செவ்வி - அழகினை (யுடையனவாய் நின்றன).

(வி - ரை) பொறி - எந்திரங்கள். பொறித்தேர் என இயைக்க; இது மூன்றனுருபும் பயனுந் தொக்கதொடர்; பொறியை யுடைய தேர் என்றலுமாம். செவ்வி-அழகு; செம்மை-பகுதி, ஈறு கெட்டதும் மகரவொற்று வகரவொற்றாகத் திரிந்ததும் சந்தி, வி - பகுதிப்பொருள் விகுதி; மையீற்றுப் பண்புப்பெயர்கள் வேறு பண்புப்பெயர் விகுதிகளோடு புணரும்போதும் பெரும்பாலும் இங்ஙனஞ் சில விகாரங்களை யடையும்; ஒண்மை-ஒட்பம், திண்மை-திட்பம் என்பனவற்றைக் காண்க. நன்மை - நன்றி, நலம் என இயல்பாய் வருதலு முண்டு; செவ்வி யென்பது காலத்தைக் குறிக்கின் வகரவொற் றிரட்டியது சந்தி எனவும், இ-ஒன்றன்படர்க்கை விகுதி எனவுங் கொள்க. 'உடையனவாய் நின்றன' என்பது இசை யெச்சம். வடிந்து - இதில் முதனிலைத் தொழிலாகுபெயராய்த் தெளிந்து விளங்கும் உருவத்தை யுணர்த்தும் வடி என்பது பகுதி; ஆகலின், இது பெயரடியாகப் பிறந்த வினையெச்ச மென்க; வடி யென்பது வுகர விகுதி பெற்று வடிவு என்றாம்; இதுவே பெரும் வரவிற்று.

இதுவுமது

22. இளையரு மீர்ங்கட் டயர வளையணிந்து
புல்லுண் கலிமாவும் பூட்டிய—நல்லா
ரிளநலம் போலக் கவினி வளமுடையா
ராக்கம்போற் பூத்தன காடு.

(ப-ரை) இளையரும் - சேவகரும், ஈர்ங்கட்டு-அழகாகிய கட்டுந் துணிகளை, அயா - கட்டுதலைச் செய்யவும், வளை அணிந்து - சாமரையைத் தலையில் அணிந்து, புல் உண்-புல்லுண்ட, கலிமாவும்-ஒலியையுடைய குதிரையையும், பூட்டிய - பூட்டவும், காடு-காடுகள், நல்லார்-மகளிர்தம், இள நலம்போல-இனிமையாகிய நன்மையைப் போல, கவினி-அழகு பெற்று, வளம் உடையார்-வருவாயையுடையவராது, ஆக்கம்போல் - செல்வம்போல, பூத்தன - மலர்ந்தன.

(வி - ரை) இளையர் என்பது எளிமையாகிய சேவகத்தொழிலில் இருப்பவர் என்னும் பொருளது. ஈரம் - குளிர்ச்சி; அஃது ஈண்டு இலக்கணையால் அழகு என்னும் பொருள் தந்தது. கட்டு என்பது கட்டப்படுதல் என்னும் செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை முதனிலைத் தொழிற்பெயர்; அது அத்தொழிலாகுபெயராய்க் கட்டப்படுக் துணியை யுணர்த்தியது. அயர்தல் - கட்டுதல். வளை - சாமரை. கலி - ஒலி; இது முதனிலைத் தொழிற்பெயர்; இதனடியாக ஒலித்த, ஒலித்து, ஒலித்தது என வினை விகற்பங்க ளுண்டாதல றிக. மகளிர்தம் இளநலம் - மாதர்க்கு உண்டாகும் இளமைப் பருவத்தின் அழகு. கவினி - இதிற் கவின் என்னும் பண்புப்பெயர் பகுதி, இ - வினையெச்ச விகுதி, இப் பகுதி - வினையில் வருதற்குரிய வினை, பெயர், இடை, உரி என்னும் பகுதிகள் நான்கனுள் பெயர்ப்பகுதி. வளம் - வளப்பம், செழிப்பு; இது பண்புப்பெயர்; இது காரியவாகுபெயராய் வளப்பத்திற்குக் (செழிப்பிற்குக்) காரணமாகிய செல்வத்தை யுணர்த்த அது அதன் வளர்ச்சிக்குக் காரணமாகிய வருவாயை யுணர்த்தியது.

தோழி தலைமகட்குப் பருவங் காட்டி வற்புறுத்தியது

23. கண்டிரண்டு முத்தங் கடுப்பப் புறவெல்லாந்
தண்டுளி யாலி புரளப் புயல்கான்று

கொண்டெழில் வானமுங் கொண்டன் றெவன்கொ
லொண்டொடி யூடு நிலை. [லோ

(ப - ரை) கண் - தங்கண், திரண்டு-திரட்சியுற்று, முத்தம் கடுப்ப - முத்துக்களை யொக்க, புயல் - நீர்த்துளிகளை, கான்று - (மரங்கள்) சொரிதலால், புறவு எல்லாம் - காடுகளின் இடங்களி லெல்லாம், தண் - குளிர்ச்சியாகிய, ஆலித் துளி - ஆலக்கட்டித் துளிகள், புரள - புரளும்படி, வானமும் - மேகங்களும், கொண்டு- கருக்கொண்டு, எழில் கொண்டு - (அதனால்) அழகைக் கொண்டு, ஈன்ற - மழையைச் சொரிந்தன; ஒள் தொடி - ஒண்மையாகிய வளையலை யுடையாய்! ஊடும் நிலை-நீ பிணங்குதற்குக் காரணமாகிய நிலைமை, எவன் - யாது?

(வி - ரை) கொல், ஓ - அசைகள். ஒண்மை - அழகு; ஒளி யென்பதுமாம். கான்று என்பது செயவென் எச்சத்திரிபு. புயல எனபது முதலாகுபெயராய் நீர்த்துளிகளை யுணர்த்தியது. 'தலைவர் குறித்த கார்காலமும் வந்துவிட்டது. இனித் தலைவர் வந்துவிடு வார். ஆகையால், நீ வருந்துதற்கு நியாயமின்று' எனத் தோழி தலைமகட்கு வற்புறுத்திக் கூறி அவளை ஆற்றுவித்தனள் என்க.

வினை முற்றிய தலைமகன் நெஞ்சோடு சொல்லியது

24. எல்லா வினையுங் கிடப்ப வெழுநெஞ்சே!
கல்லோங்கு கானங் களிற்றின் மதநாறும்
பல்லிருங் கூந்தல் பணிநோனாள் கார்வான
மெல்லியுந் தோன்றுஞ் செயல்.

(ப - ரை) கார் வானம் - கரிய மேகங்கள், எல்லியும் - இரவி னும், தோன்றும் செயல் - தோன்றுகின்ற செயலால், பல் - பலவகையாக முடிக்கப்படுகின்ற, இரும் கூந்தல் - பெருமையாகிய கூந்தலையுடையாள், பணி நோனாள் - ஆபரணங்களைத் தாங்கவும்

ஆற்ருளாய் வருந்துவள்; (ஆகையால்) நெஞ்சே - மனமே!, களிற்றின் மதம் நாறும் - ஆண்யானைகளினுடைய மதங்களின் மணம் (எம்மருங்கும்) வீசும், ஓங்கு கல் - உயர்ந்த மலைகளையுடைய, கானம - காட்டின் வழியூடே, எல்லா வினையும் - மற்றுஞ் செய்ய வேண்டிய எல்லாக் காரியங்களும், கிடப்ப - பிறகு செய்தற்குரியனவாக இருக்கவிட்டு, எழு - புறப்படு.

(வி - ரை) களிற்றின் மதநாறும் ஓங்கு கற்கானம் என இயைக்க; எல்லியும் என்றது பகற்பொழுதிற் ேறன்றுதலே யன்றிக கலவிக்குரிய இராப்பொழுதினும் என்னும் பொருளைத் தருதலால் அதின் உம்மை எச்சப்பொருளது. 'கார்வான, மெல்லவும்' எனவும் பாடமுண்டு; இப் பாடத்தைக் கொள்ளின் 'வானம் எல்லவும்' எனப் பிரித்து 'மேகம் யாவும்' எனப் பொருள் கொள்க.

பருவங் கண்டழிந்த தலைமகளாற்றல் வேண்டித்
தோழி தனதாற்றுமை தோன்ற உரைத்தது

25. கருங்கால் வரகின் பொரிப்போ லரும்பவிழ்ந்
தீர்ந்தண் புறவிற் றெறுவி மலர்ந்தன
சேர்ந்தன செய்குறி வாரா ரவரென்று
கூர்ந்த பசலை யவட்கு.

(ப - ரை) ஈர்ந்தண் புறவில் - மிக்க குளிர்ச்சியையுடைய முல்லை நிலத்தில், தெறுவி - தெறுவியானது, கரும் கால் - கரிய தாளினையுடைய, வரகின் பொரிப்போல் - வரகினது பொரியைப் போல, அரும்பு அவிழ்ந்து மலர்ந்தன - அரும்புகளின் இதழ்கள் அவிழப்பெற்று மலர்ந்தன (ஆகையால்), அவர் செய் - நந்தலைவர் (தாம் வருதற்குரியனவென்று) குறித்த, குறி - குறிகள், சேர்ந்தன - வந்து தோன்றின; வாரார் - (இனி அவர்) வருவாரல்லர் என்று எண்ணி (அதனுல்), அவட்கு - அவளுக்கு (தலைவிக்கு), பசலை கூர்ந்த - பசலை நிறங்கள் மிக்கன.

(வி - ரை) 'இதற்கு யான் என் செய்வேன்' என்பது இசையெச்சம். தெறுவி என்ற இடத்துத் 'தெறூழ்வீ' எனவும் பாடமுண்டு. செய்குறி - காலங் கரந்த பெயரெச்சத்தொகை. 'அவர் செய் குறி வாரார் என்று' என இயைக்க.

தோழி தலைமகட்குப் பருவங் காட்டி வற்புறுத்தியது.

26. நலமிகு கார்த்திகை நாட்டவ ரிட்ட
தலைநாள் விளக்கிற் றகையுடைய வாகிப்
புலமெலாம் பூத்தன தோன்றிசின் மென்மொழி
தூதொடு வந்த மழை.

(ப - ரை) சின் மெல் மொழி - சின்மையு மென்மையுமுடைய மொழியையுடையாய்!, புலம் எல்லாம் - வயல்களிலெல்லாம், தோன்றி - செங்காந்தள்கள், நலம் மிகு - நன்மை மிக்க, கார்த்திகை-கார்த்திகை மாதத்தின், தலை நாள்-(கிருத்திகை நக்ஷத்திரங் கூடிய) சிறந்த நாளில், நாட்டவர் - நாட்டிலுள்ள ஜனங்கள், இட்ட-ஏற்றிய, விளக்கின் - விளக்குகளைப்போல, தகை உடைய வாகி - மேன்மையை யுடையனவாகி, பூத்தன - மலர்ந்தன; மழை - மேகங்கள், தூதொடு வந்த - தூதாக வந்தன.

(வி - ரை) ஆகையால் தலைவர் குறித்தபடி வந்துவிடுவர்; நீ வருந்தலை என்பது இசையெச்சம். தூதொடு என்பதில் ஒடு விசேடணப்பொருளது. சின்மை - மென்மைத்தன்மையால் சில சொற்களையே பேசுதலை யுணர்த்திற்று. சின்மென்மொழி - உம்மைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைப்பெயர்.

பருவங்கண் டழிந்த தலைமக ளாற்றல் வேண்டித்
தோழி தனதாற்றமை தோன்ற உரைத்தது.

27. முருகியம்போல் வான முழங்கி யிரங்கக்
குருகிலை பூத்தன கானம்—பிரிவெண்ணி

யுள்ளார் தகன்றாரென் றூடியாம் பாராட்டிற்
பள்ளியுட் பாயும் பசப்பு.

(ப - ரை) வானம் - மேகங்கள், முருகு - வெறியாட்டாள னுடைய, இயம் போல் வாத்தியத்தைப்போல, முழங்கி இரங்க- மிகவும் ஒலிக்க, கானம் - காட்டிலுள்ள (மரங்கள்), குருகு - இளமையாகிய, இலை - இலைகளுக் கிடையில், பூத்தன - பூக்களைத் தோற்றுவித்தன (ஆதலின்), பிரிவு எண்ணி - (தலைவரது) பிரிவை நினைந்து, உள்ளாது - (எனது வருத்தத்தைச் சிறிதும்) கருதாமல், அகன்றார்-(தலைவர்) சென்றார், என்று - என்று எண்ணி, ஊடி - (தலைவி எம்மோடு பேசுதன் முதலியன விடுத்துப்) பிணங்கினளாக, பள்ளியுள் - (அவள் படுத்துள்ள) படுக்கையில், யாம் பாராட்டின் - யாம் சென்று பாராட்டினால், பசப்பு-பொன்னிறங்கள், பாயும் - அவளுக்குப் பரவாநின்றன.

(வி - ரை) 'இதற்கு யாம் என் செய்வோம்' என்பது இசையெச்சம். இங்குத் தோழி மற்றைத் தோழியரையுந் தன்னொடு படுத்தி 'யாம்' என்றாள் என்க. 'குருசிலை' எனவும் பாடமுண்டு; 'பாராட்ட' எனவும் பாடம்.

வினை முற்றிய தலைமகள் நெஞ்சொடு சொல்லியது.

28. இமிழிசை வான முழங்கக் குமிழினார்ப்பூம்
பொன்செய் குழையிற் றுணர்தூங்கத் தண்பதஞ்
செவ்வி யுடையதா நெஞ்சே!என் காதலியூர்
கவ்வை யழுங்கச் செலற்கு.

(ப - ரை) நெஞ்சே - மனமே!, வானம்-மேகங்கள், இமிழ் இசை-பறையின் ஒலியைப்போல, முழங்க-ஒலிக்க, பொன் செய்- பொன்னாற் செய்யப்பட்ட, குழையில்-காதணியைப்போல, குமிழ்- முகிழ்த்த, இணர் - இதழ்களையுடைய, பூந்துணர்-பூங்கொத்துகள்,

தூங்க - அசைய, தண் பதம் - குளிர்ச்சியாகிய இக் காலம், என் காதலி ஊர் - என் காதலி கொண்டுள்ள, கவ்வை அழுங்க - துன் பங் கெடும்படி, செலற்கு - நாம் செல்லுதற்கு, செவ்வி உடையது ஆம் - தகுதியுடையதா யிருக்கின்றது.

(வி - ரை) 'ஆதலின் இனிச் செல்வோம் வருக' என்பது இசையெச்சம். குமிழ்-ஒருவகை மரமுமாம்; ஈற்றுயிர்மெய் கெட்டு நின்ற ஆம் என்னும் செய்யுமென்முற்று ஈண்டு நிகழ்கால முணர்த் திற்று. இணர்-பூவிதழ்; இஃது இப்பொருளதாதலைப் "பல்லிணர்க் குரலும்" எனக் குறிஞ்சிப்பாட்டின் அறுபத்தொன்பதாம் அடியில் வருந் தொடரின் உரையாலறிக.

இதுவுமது

29. பொங்கரு ஞாங்கர் மலர்ந்தன தாங்கார்
தகைவண்டு பாண்முரலும் கானம் பகைகொண்ட
வெவ்வெத் திசைகளும் வந்தன்று சேறுநாம்
செவ்வி யுடைய சுரம்.

(ப - ரை) கானம் - காடுகளில், பொங்கருழ் - மரக்கிளைக ளும், ஞாங்கர் - பங்கங்களில், மலர்ந்தன—; தகை வண்டு—மேன் மையையுடைய வண்டுகள், பாண் முரலும்-இசையைப் பாடாநின் றன; பகை கொண்ட - தனக்குப் பகைவனாகிய வெய்யோன் தன் வசமாகக் கொண்டிருந்த, எவவெத்திசைகளும்-எல்லாத்திசைகளி லும், கார் வந்தன்று - மேகம் வந்து பொருந்தியது (ஆகையால்), செவ்வியுடைய சுரம்-செம்மையையுடைய வழியில், நாம் சேறும் - (நெஞ்சே! எனது காதலியின் ஊரை அடைதற்பொருட்டு) நாம் செல்வோம்.

(வி - ரை) மேகத்துக்குப் பகையாகிய சூரியனைப் பகை என்றது உபசாரம். முன்பாட்டில் 'நெஞ்சே!என் காதலியூர்' என்ற

சொற்கள் ஈண்டுங் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டன. எவ்வெத் திசைகளுங் கார்வந்தன்று என இயைக்க. தாம் - அசை.

இதுவுமது

30. வரைமல்க வானஞ் சிறப்ப வுறைபோழ்ந்
திருநிலந் தீம்பெய றாழத்—திரைநாற
வூதை யுளரு நறுந்தண்கா பேதை
பெருமட நம்மாட் டுரைத்து.

(ப-ரை) தீம் பெயல்-இனிமையைச் செய்யு மழையானது, வரை மல்க-மலைகள் (தன்கட்டோன்றும் பொருள் வளத்தாற்) சிறக்கவும், வானம் சிறப்ப - (குளிர்ச்சியினால்) ஆகாயமானது மேன்மை யடையவும், திரை நாற - (புதிய வருவாயினால்) கடலானது புதியதொரு நாற்றத்தை யுடையதாகவும், உறை - (தன்) துளிகள், இரு நிலம்-பெரிய பூமியை, போழ்ந்து-பிளக்கும்படி, தாழ-பெய்தலால், தண்-குளிர்ச்சியாகிய, நறும் கா-சிறந்த சோலைகள், பேதை-எனது காதலியின், பெரும் மடம் - மிக்க இளமையை, நம்மாட்டு உரைத்து - நம்மிடத்துச் சொல்லி (நம்மிடத்துச் சொல்லுதல் போல என்பது கருத்து), ஊதை உளரும் - காற்றை உலவச் செய்கின்றன.

(வி-ரை) உளரும் என்னுஞ் செய்யுமென் முற்று உளர்விக்கும் என்னும் பிறவினைப் பொருளில் வந்தது. அன்றி, 'நறுந் தண் காவில் ஊதை உளரும்' எனத் தன்வினையாக முடித்தலுமாம். 'ஆதலின், காதலியூர் சேறுநாம்' என்பது இசையெச்சம்

வினைமுற்றிய தலைமகன் பாகற்குச் சொல்லியது

31. கார்ச்சே ணிகந்த கரைமருங்கி னீர்ச்சேர்ந்து
எருமை யெழிலே றெறிபவர் சூடிச்
செருமிகு மள்ளரிற் செம்மாக்குஞ் செவ்வி
திருநுதற் கியாஞ்செய் குறி.

(ப - ரை) எழில்-அழகாகிய, எருமை ஏறு - எருமைக்கடாக்கள், கார் - மேகத்தையுடைய, சேண் இகந்த - ஆகாயத்தை விட்டு நீங்கிய, நீர்ச் சேர்ந்து - நீரையுடைய குளமுதலிய நீர்நிலைகளை அடைந்து, கரை மருங்கின் - அவற்றின் கரைகளின் பக்கங்களில், எறி - (மாந்தர்களாற்) பறித்தெறியப்பட்ட, பவர் சூடி - பூங்கொடிகளைச் சூடிக்கொண்டு, செரு - போரில், மிகு - (வெற்றியாற்) சிறந்த, மள்ளரின்-(வெற்றிமாலையைச் சூடிய) மறவரைப் போல, செம்மாக்கும் - இறுமாப்புற்றிருக்கும், செவ்வி-இக்காலமே, திருநுதற்கு - அழகாகிய நெற்றியையுடைய எனது காதலிக்கு, யாம் செய் - (வருவோம் என) யாம் குறித்த, குறி - குறியையுடைய காலமாகும்.

(வி - ரை) ஆதலால், 'பாக! தேர் கடாவுக' என்பது இசையெச்சம். இச் செய்யுள் பின் வருஞ் செய்யுளைத் தழுவி நின்றது. யாம் - தனித்தன்மைப்பன்மை, உயர்வு பற்றியது. மறவர் - வீரர்.

### இதுவுமது

32. கடாவுக பாகதேர் காலோடக் கண்டே
கெடாஅப் புகழ்வேட்கைச் செல்வர் மனம்போற்
படாஅ மகிழ்வண்டு பாண்முரலுங் கானம்
பிடாஅப் பெருந்தகை நற்கு.

(ப - ரை) பிடா-பிடவமரங்கள், பெரும் தகை-(செழித்துப் பூத்துப்) பெருந்தன்மையை யெய்தியுள்ள, கானம் - காடுகளில், நற்கு-நன்றாக, கால் ஓடக் கண்டு-காற்று ஓடியுலவுதலைப் பார்த்து, கெடாப் புகழ்-அழியாத புகழினைச் செய்யும், வேட்கை-(அறவழியிலும்) விருப்பத்தினையுடைய, செல்வர் மனம்போல் - செல்வர்களின் மனத்தைப்போல, படா - கெடாத, மகிழ் - மகிழ்ச்சியினையுடைய, வண்டு - வண்டுகள், பாண் முரலும் - இசையைப் பாடா

நின்றன; (ஆதலால்), பாக - பாகனே!, தேர் கடாவுக - (எமது காதலியூரை அடைதற் பொருட்டுத்) தேரைச் செலுத்துவாயாக.

(வி - ரை) 'பிடாப் பெருந்தகைககானம் நற்குக் காலோடக் கண்டு கெடாப்புகழ் வேட்கைச் செல்வர் மனம்போற் படாமகிழ் வண்டுபாண் முரலும்' என இயைக்க. முரலும் என்னுஞ் செய்யு மென் முற்று ஈண்டு நிகழ்கால முணர்த்திற்று.

இதுவுமது

33. கடனீர் முகந்த கமஞ்சூ லெழிலி
குடமலை யாகத்துக கொள்ளப் பிறக்கு
மிடமென வாங்கே குறிசெய்தேம் பேதை
மடமொழி யெவ்வங் கெட.

(ப-ரை) குட மலை - மேற்குமலை, ஆகத்து - தன் இடத்தில், கொள்ள-(நீர்த்தாரைகளைக்)கொள்ளும்படி, கடல் நீர்-கடலிலுள்ள நீரை, முகந்த - பருகிக்கொண்டதனலாகிய, கமம்-நிறைந்த, சூல் - கருவினையுடைய, எழிலி - மேகஙகள், பிறக்கும்-தோன்றும், இடம் என-காலமாகிய இடமே நாம் மீண்டு வருதற்கு உரியதென்று, பேதை - பேதையாகிய, மடம் மொழி - மென்மையாகிய மொழி யினையுடைய எம் தலைவியினது, எவவம் - துன்பம், கெட - நீஙக, ஆஙகு - நயது ஊரில், குறி செய்தேம் - குறி செய்தோம்.

(வி - ரை) ஆதலால், 'பாகனே! விரைந்து தேரைச் செலு த்துவாயாக' என்பது இசையெச்சம். ஈண்டு இடமென்றது கால மாகிய இடத்தை முகந்த என்னும் பெயரெச்சங காரணப்பொரு ளது. கொள்ள, கெட என்னும் வினையெச்சங்கள் ஈண்டுக் காரியப் பொருளில் வந்தனவாகலின் எதிர்கால முணர்த்தின. மடமொழி- பண்புத் தொகைப்புறததுப் பிறந்த அன்மொழித்தொகைப்பெயர்.

பருவங்கண்டழிந்த தலைமகளாற்றல் வேண்டித் தோழி
தனதாற்றாமை தோன்ற உரைத்தது

34. விரிதிரை வான முவப்பப் பருகிப்
பெருவிறல் வானம் பெருவரை சேருங்
கருவணி காலங் குறித்தார் திருவணிந்த
வொண்ணுதன் மாதர் திறத்து.

(ப-ரை) திரு - அழகினுக்கு, அணிந்த - அழகு செய்த, ஒள் நுதல்-ஒளியினைக் கொண்ட நெற்றியினையுடைய, மாதர் திறத்து - எமது தலைவியினிடத்து, பெரு விறல் - மிக்க வெற்றியை யுடைய, வானம் - மேகம், விரி திரை - மிகுந்த அலைகளையுடைய கடலிலுள்ள, வான் அம் - மிகுதியாகிய நீரை, உவப்ப - களிக்க, பருகி - உண்டு, பெரு வரை - பெரிய மலையில், சேரும் - மழை நீராகச் சேர்தற்குரியதாகும்படி, கரு அணி-கருவினால் அலங்கரிக்கப்படும், காலம் - காலமே (யாம் வருதற்குரியதென்று), குறித்தார் - குறி செய்தனர்.

(வி - ரை) 'இன்னும் வந்திலரே என் செய்வேன்' என்பது இசையெச்சம். விரிதிரை - வினைத்தொகை; இதில் திரை என்பது சினையாகுபெயராய்க் கடலை யுணர்த்தியது; திரை என்பது தனி நின்று பல விடங்களிற் கடலை யுணர்த்தலின் விரிதிரை என்பதை வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை என்றுரைத்தலாகாது. திருவணிந்த - நான்கன்றொகை. மாதர்திறம் - ஆறன்றொகை.

இதுவுமது

35. சென்றநங் காதலர் சேணிகந்தா ரென்றெண்ணி
யொன்றிய நோயோ டிடும்பை பலகூர

வென்றி முரசி னிரங்கி யெழில்வான
நின்று மிரங்கு மிவட்கு.

(ப - ரை) சென்ற-(வேந்தன் தொழின்மேற்) சென்ற, நம் காதலர்-நம்முடைய காதற்றலைவர், சேண் இகந்தார்-மிகவும் தூரத்திற் சென்றிருக்கின்றார், (ஆதலாற்றான் தாம் குறித்த காலத்தில் வந்திலர்) என்று எண்ணி - என்று நினைந்து, ஒன்றிய நோயொடு-மனத்திற் பொருந்திய நோயோடு, பல இடும்பை கூர-(நந்தலைவி) பல துன்பங்கள் மிகப் பெறுதலால், இவட்கு - இங்ஙனந் துன்ப மிகப் பெற்ற நந்தலைவியின்பொருட்டு, எழில் வானம் - அழகிய மேகங்கள், நின்றும்-வானத்தில் இருந்தும், வென்றி முரசின் - வெற்றியை யுணர்த்து முரசின் ஒலிபோல, இரங்கி - ஒலித்து, இரங்கும் - இரங்காநின்றன.

(வி - ரை) 'இங்ஙனம் மேக மிரங்குதலைக் கண்டும் நம் தலைவர் வந்திலரோ என் செய்வோம்' என்பது இசையெச்சம். வானத்தி லிருக்கு மேகமும் இரங்குவதற்குரியதாகும் நந்தலைவியின் மெல்லியற்றன்மையை யுணர்ந்தவராகும் நந்தலைவர் இன்னும் வாராமைக்குக் காரணம் யாது என்பது கருத்து. முரசு என்பது பொருளாகுபெயராய் அதன் ஒலியை யுணர்த்தியது. வென்றி முரசு - இரண்டனுருபும் பயனும் உடன்தொக்கதொகை.

**வினை முற்றிய தலைமகன் பாகனொடு சொல்லியது**

36. சிரல்வாய் வளப்பின வாகி நிரலொப்ப
ஈர்ந்தண் டளவந் தகைந்தன—சீர்த்தக்க
செல்வ மழைமதர்கட் சின்மொழிப் பேதையூர்
நல்விருந் தாக நமக்கு.

(ப - ரை) ஈர்ம் தண்-மிக்க குளிர்ச்சியினையுடைய, தளவம்-முல்லைமலர்கள், சிரல் - சிச்சிலிக்குருவியினது, வாய் - வாயைப் போன்ற, வனப்பின ஆகி-அழகையுடையவாகி, நிரல் ஒப்ப-வரிசையாக, தகைந்தன - மலர்ந்தன (ஆதலாற் பாகனே!), சீர் - சிறப்பினையுடைய, தக்க - தகுதி வாய்ந்த, செல்வம் - செல்வத்தன்மையினைக் காட்டும், மழை - குளிர்ச்சியினையுடைய, மதர் - (இளம் பருவத்தின் அறிகுறியாக) மதர்த்துள்ள, கண் - கண்ணையும், சில் மொழி - சிலவாகிய மொழியினையுமுடைய, பேதை ஊர் - நங் காதலியின் ஊரில், நமக்கு நல் விருந்து ஆக-நமக்கு நல்ல விருந்தாதல் வேண்டும்.

(வி - ரை) 'பாகனே! விரைந்து தேரைச் செலுத்துக' என்பது இசையெச்சம். பேதையூர் நல்ல விருந்தினைப்போல இன்பஞ் செய்வதாக என்பதுமாம். 'நிழலொப்ப' எனவும் பாடம்.

பருவங் காட்டித் தோழி தலைமகளை வற்புறுத்தியது

37\. கருங்கடன் மேய்ந்த கமஞ்சூ லெழிலி
யிருங்க லிருவரை யேறி யுயிர்க்கும்
பெருமபதக் காலையும் வாரார்கொல் வேந்த
னருநதொழில் வாய்த்த நமர்.

(ப - ரை) வேந்தன் - அரசனுடைய, அரும் தொழில் - அருமையாகிய தொழில், வாய்த்த - வாய்க்கப்பெற்றுச் (சென்ற), நமர் - நம்முடைய தலைவர், கரும் கடல்-கரிய கடலிலுள்ள நீரை, மேய்ந்த - உண்டதனாலாகிய, கமம் - நிறைந்த, சூல் - கருவினையுடைய, எழிலி - மேகங்கள், இரும் கல் - பெரிய கற்களையுடைய, இருவரை - பெரிய வரையினது மேலான இடத்தில், ஏறி - ஏறி இருந்து, உயிர்க்கும் - [மழைநீரைச்] சொரிகின்ற, பெரும் பதம் -

மிக்க செவ்வியினையுடைய, காலையும் - இக்காலத்தினும், வாரார்கொல் - வாராமலிருப்பரோ.

(வி - ரை) 'வருவர், நீ கலங்கலே' என்பது இசையெச்சம். மேய்ந்த என்னும் பெயரெச்சம் காரணப்பொருளது. வரை என்பது சினையாகுபெயராய் மூங்கிலை யுணர்த்த அது தானியாகுபெயராய் மலையை யுணர்த்தலின் இருமடியாகுபெயர். காலையும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்போடு கூடியஎச்சப்பொருளது. வாரார்கொல் என்பதிற் கொல் வினைப்பொருளில் வந்தது.

## இதுவுமது

38. புகர்முகம் பூழி புரள வுயர்நிலை
வெஞ்சின வேழம் பிடியோ டிணைதாழத்
தண்பதக் காலையும் வாரா ரெவன்கொலோ
வொண்டொடி யூடு நிலை.

(ப - ரை) உயர் நிலை - மலைகளிலுள்ள, வெம் சினம் - கொடிய கோபத்தினையுடைய, வேழம் - களிற்றியானை, புகர் - புகர்நிறத்தினையுடைய, முகம் - முகத்தில், பூழி - (மழைநீரால்) குழைந்த சேறு, புரள - புரளவும், பிடியோடு - பெண்யானைகளுடன், இணை தாழ - அவை கூடுதல் தாழவும் (வாய்ந்த), தண் பதம்-குளிர்ச்சியாகிய செவ்வியினையுடைய, காலையும்-இக்காலத்தினும், வாரார் கொல் - வாராமலிருப்பரோ; ஒள் தொடி-ஒண்மையாகிய வளையினையுடையாய்!, ஊடும் நிலை - நீ ஊடுதற்குக் காரணமாகிய நிலைமை, எவன் - யாது?

(வி - ரை) 'வருவர், நீ ஊடுதல் வேண்டாம்' என்பது கருத்து. வாரா ரெவன்கொலோ வொண்டொடி யூடுநிலை என்பதனை வாரார்கொல் ஒண்டொடி யூடுநிலை எவன் என இயைக்க. உயர்

நிலை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைப் பெயர்; இது விரியின் உயர்ந்த நிலையினையுடையது என்றும். ஒண்டொடி என்பது பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைப் பெயர்.

இதுவுமது

39. அலவன்க ணேய்ப்ப வரும்பீன் றவிழ்ந்த
கருங்கதிர் நொச்சிப் பசுந்தழை சூடி
யிரும்புன மேர்க்கடி கொண்டார் பெருங்கவ்வை
யாகின்று நம்மூ ரவர்க்கு.

(ப - ரை) அலவன் கண் ஏய்ப்ப - நண்டுகளின் கண்ணை யொப்ப, அரும்பு ஈன்று அவிழ்ந்த - அரும்பினை ஈன்று பின் மலர்ந்த, கரும் கதிர் - கருமையாகிய கதிரினையுடைய, நொச்சிப் பசுந் தழை - நொச்சியினது பசுமையாகிய தழையை, சூடி-அணிந்து, இரும் புனம் - பெரிய புனங்களை, ஒக்க-யாவரும் ஒருமிக்க, அடிகொண்டார் - புதிதாகத் தொடங்கினார்; (ஆகையால்), நம் ஊரவர்க்கு - நம் காதலாகியவருக்கு, பெரும் கவ்வை ஆகின்று - பெரிய அலராயிற்று.

(வி - ரை) நொச்சிப் பசுந்தழை என்றதை நொச்சித்தழை, பசுந்தழை என இயைக்க. அலவன்கண், நொச்சித்தழை என்பன உறுப்புத் தற்கிழமைப் பொருளதாகிய ஆறன் றொகைகள். அடி கொண்டார் என்பது ஈண்டு ஒருசொல்.

இதுவுமது

40. வந்தன செய்குறி வாரா ரவரென்று
நொந்த வொருத்திக்கு நோய்தீர் மருந்தாகி
யிந்தின் கனிவண்ணங் கொண்ட தெழில்வானி
னந்துமென் பேதை நுதல்.

*

(ப-ரை) மென் பேதை-மென்மைத் தன்மையுடைய பேதை யே!, அவர் செய் குறி வந்தன - அவர் செய்த குறிகள் வந்தன; வாரார் என்று-இனி அவர் வாரார்போலும் என்று, நொந்த ஒருத்தி க்கு - வருந்திய ஒருத்தியாகிய உனக்கு, நோய் தீர் மருந்து ஆகி - நோயைத் தீர்க்கு மருந்தாகி, எழில் வானம்-அழகிய மேகமானது, ஈந்தின் கனிவண்ணம் கொண்டது-ஈந்தின்கனியினது கரிய நிறத் தை அடைந்தது; நுதல் - (உனது) நெற்றி, நந்தும் - இனி ஒளி வளரப்பெறும்.

(வி - ரை) ஈந்து என்பது குறுக்கல் விகாரம் பெற்று இந்து என்றாயிற்று; இன் - சாரியை; அன்றி இனிமை என்பதுமாம். நந்தும் - இஃது ஈண்டு எதிர்காலங் காட்டிற்று. பேதை-அண்மை விளி. ஒருத்திக்கு - ஒருத்தியாகிய உனக்கு என்பது; இது முன் னிலையிற் படர்க்கை வந்தது.

கார் நாற்பது மூலமும் உரையும் முற்றிற்று.

---

## கார் நாற்பதின்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி



THIRD EDITION]                                        [1000 COPIES

**அரிச்சந்திர புராண வசனம்:** அரிச்சந்திர புராண மூலத்தை யது சரித்துத் தமிழில் நூதனமாக வசனப்படுத்தப்பட்ட அரிய நூல்; இனிய நடையில் கதை விரிவாக அமைந்தது: விலை ரூபா 1-8-0

**அருணசலபுராண வசனம்:** அடியார்களின் பாவத்தைப் போக்கும் திருவண்ணமலை ஸ்ரீ அருணசலேசுவரரின் மீது பாடப்பட்டுள்ள மேடி புராணத்தின் கருத்தை எல்லோரும் அறிந்துணருமாறு இனிய நடையில் வசன ரூபமாக இயற்றப்பெற்றது: ரூபா 1

**பிரபோத சந்திரோதய வசனம்,** என்னும் மெய்ஞ்ஞான விளக்கம்: விலை ரூபா 1

**பிரபுலிங்கலீலை வசனம்:** கவிச் சக்கரவர்த்தியாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச ஸ்வாமிக ளியற்றிய அரிய நூலின் தமிழ் வசனம்: விலை ரூபா 1

**வேதப்பொருள் விளக்கம்:** ருக், யஜுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களிலுள்ள முக்கிய விஷயங்கள் அடங்கியது: விலை அணு 12. **வேதப்பொருள் சார சங்கிரகம்:** அணு 4

**மத விருக்ஷம்:** உலகத்தி லுள்ள பெரிய மதங்களின் சரித்திரமும் வரலாறும்: விலை ரூபா 2-0-0

**பச்சையப்ப முதலியார்:** சரித்திரமும், அவர்மீது பல வித்வான்கள் பாடிய பாடல்களும் கீர்த்தனங்களும்: முதலியார் உருவப் படத்துடன்: விலை அணு 10

**சைவசமய விளக்க வினவிடையும்,** சைவசமய ஆசௌச வினவிடையும்: விலை அணு 8

**வீரசைவ வினவிடை:** இதில்வீரசைவ மதத்தின் சமயாசார இலக்கணங்கள் யாவும் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன: அணு 5

**மாதரொழுக்க இலக்கணம்:** ஸ்திரீகள் நடந்துகொள்ள வேண்டிய முறைகள்: விலை அணு 3

**கல்லாடம்:** (கல்லாட முனிவர் இயற்றிய அரிய புராதன நூல்) மூலமும் உரையும்: விலை ரூபா 3